22nd January 1964]

SRI K. BALASUBRAMANYA AYYAR: I request you, Sir, to give me a little more time. I would have spoken on the very first day, but on account of the fact that I was not well, I did not attend the meeting. Otherwise, I would not make this request. I will speak only relevantly, Sir.

So far as fair price shops are concerned, I request the Government to give as far as possible the best rice of our own country. I am told, in America sometime the Government give subsidies to producers of rice.

VIDWAN T. MUTHUKANNAPPAN: On a point of order, Sir. Can a Member speaking in Tamil suddenly switch over to English?

MR. CHAIRMAN: Yes, he can. Let not the hon. Member be disturbed. Let him continue his speech.

**திரு. கே. பாலசுப்ரமணிய அய்யர்:** அங்கங்கே அப்படித் தவறுகள் இருக்கிறதாக அவரே ஒப்புக்கொள்கிறார்கள். அதனாலே, இந்தத் தவறுகளினாலே, உரம் சரியாகப் போய்ச் சேராது, யூனியனிலிருந்து போய்ச் சேராது. அவர்கள் பூமியைப் பரீட்சை செய்ய வேண்டுமென்று சொன்னால், ரொம்ப ரொம்ப தோண்டித் தோண்டி, கெட்டுப் போய் விடுமே தவிர, இனிமேல் பரீட்சை ஒன்றும் பண்ண முடியாது. North Arcot ஜில்லாவில் எல்லாம், இப்போது போய் உரத்துக்கு ஏற்றதா என்று இன்னும் பூமியை பரீட்சை செய்து கொண்டிருந்தால், அது ரொம்ப நாள் ஆகிவிடும். நாம் பார்த்துக் கொண்டே இருக்கிறோம். நாம் கண்டு பிடித்த பிறகு தானே முடியும். இது எல்லாம் நடக்கக் கூடிய காரியமாக எனக்குத் தோன்றவில்லை. இன்று உரங்களை வாங்குபவர்களுக்கு பொறுப்பு இருக்கும்படியாகச் செய்ய வேண்டும். அதிலே அங்கத்தினர்கள் யோசனை சொல்லும்படி, கவர்னர் பெருமான் கேட்டிருக்கிறார்கள். என்னுடைய யோசனையைச் சொல்லியிருக்கிறேன். இதில் சரியான முறையில் செய்யாவிட்டால், 70 லட்சம் டன் இந்த மூன்றாவது திட்டத்தில் உற்பத்தி ஆகும் என்று எனக்குத் தோன்றவில்லை. அப்படி இருந்ததனால் தான், இப்போது நமக்கு உற்பத்தி குறைவாகப் போகும். அப்போது விலைவாசிகள் தான் அதிகம் ஆகும்.

காய்கறிகளைப் பற்றி எனக்கு ஆச்சரியம். விலையைக் குறைப்பதற்காக ஒரு திட்டம் போட்டிருக்கிறோம் என்று சென்ற ஆண்டிலே சொன்னார்கள். அகைப்பற்றி இந்த ஆண்டிலெ பேச்சே இல்லை. அதற்குப் பதிலாக, இப்போது urban towns -ல் வீடு கட்டும் பூமியாக அங்கே வைத்து, அதில் காய்கறி வைப்பதற்கு எதாவது எற்பாடு பண்ணினார்களா என்று தெரியவில்லை. காய்கறிகளின் விலையைக் குறைக்க வேண்டும். பூமி விளையாதிருக்கிற சமயத்திலே, காய்கறிகளைப் போடலாம். நமது மந்திரி மன்றாடியார் அவர்கள் அழகாகப் போட்டிருக்கிறார்கள். உற்பத்தி அதிகமானால், ஒருவேளை விலை குறையலாம். பதியம் போடும்படி

[திரு. கே. பாலசுப்ரமணிய அய்யர்] [22nd January 1964

யான முறையில், என்னத்துக்கு காய்கறி சாகுபடி பண்ணுவது என்று session நடந்தபோது இவர்களே வழி காட்டிக் கொடுத்து இருக்கிறார்கள். இதில் அநேக திட்டங்கள் வேண்டு மென்று கூட நேற்று நடந்த பொறுக்குக் கமிட்டியில் நான் வாதாடி னேன். அந்த மாதிரியாக காய்கறி நன்றாகப் பண்ணுகிறோம் என்று அவர்களுக்குக் காண்பித்து, அவர்கள் பார்த்துப் பரிசீலனை பண்ணியான பிறகு, அதற்கு ஏதாவது வழி பண்ணினால் தேவலை என்று நினைக்கிறேன்.

தஞ்சாவூர் ஜில்லாவிலும், திருச்சி ஜில்லாவிலும் இப்போது சாகு படி நன்றாகச் செய்யப்படவில்லை. முதல் மந்திரி அவர்கள் தஞ்சாவூர் போய் வந்து அந்த மாதிரி தெரிவித்திருக்கிறார்கள். பேப்பரில் வந்திருக்கிறது. ரொம்ப சாகுபடி குறைஞ்சு இருக்கிற தாகச் சொன்னார்கள். அப்படி இருக்கிறபோது, அவர்களுக்கு வரி வஜா கொடுத்து, water tax என்று இன்று இருக்கிறதை நிறுத்தி வைத்துவிட வேண்டும். இப்போது புயல் காற்று ஏற் பட்டு, எல்லா வாழையும் போய்விட்டது. வாழை காற்றுக்கு நிற்காது போய்விடும். அதனால் தான் "வாழையடி வாழை என வந்த திருக் கூட்டம்" என்று ராமலிங்க சுவாமிகள் பாடினார்கள். வாழை என்றால், காற்று அடிச்சால் போதும், விழுந்தால் குலையோடு விழும். புயல் காற்று அடிச்சதுக்கு அப்புறம் பழம் 2½ அணு 3 அணு விலை, கும்பகோணத்திலே. அப்படியும் வாங்கிச் சாப்பிட்டார்கள். அங்கே வாழைப்பழமே சாப்பிட வேண்டாமென்று ஒன்றும் தீர்மானம் பண்ணவில்லை. ஊரில் இருக்கிற வாழை எல்லாம் போய்விட்டது. வாழையானது உயர்ந்த ரகமான சத்துள்ள வாழை. அப்பேர்ப்பட்ட ஒரு நிலையிலே, வேண்டிய பரிசீலனை பண்ணி, அவர்களுக்கு வேண்டிய பரிகாரங் களைச் செய்யத்தான் வேண்டும். அதில் ஒன்றும் சந்தேகம் இல்லை.

இரண்டாவது அரிசி விலையைக் குறைக்க Fair Price Shops
12-30 p.m. ஏற்படுத்தி விற்கிறதை நான் பார்க்கிறேன். அதிலே ஒரு ஆச்சரி யம் நம் ஊர் அரிசியே காணோம். American Rice இவ்வளவு ஒரு லிட்டருக்கு என்று போட்டிருக்கிறது. ஏன், வாங்கின வர்கள் என்ன செய்கிறார்கள்? வாங்கினவர்களும் குறைவாகத்தான் போட்டு வாங்குகிறார்கள். அந்த நிலையிலே இருக்கிறது. ஒரு பிரயோசனமும் இல்லை. நெல்லூர் அரிசியை எவனும் கொடுக்க மாட்டான். இப்போது சிரமப்பட்டு, நெல்லூர் அரிசியை வாங்கிக் கொண்டு வந்திருக்கிறான். நம்முடைய ஊர் அரிசியைக் காணோம்.

கீழ் சபை என்றால், கோவித்துக் கொள்வார்கள். இங்கே சட்ட சபையில் இருக்கப்பட்டவர்கள் ஏதாவது கேட்டால், எல்லாம் நீங்கள் எல்லாம் Bengal க்கு அனுப்பி விடுகிறீர்கள். எங்கே இருக்கிறது அரிசி என்றெல்லாம் கூட அங்குள்ளவர்கள் சொன்னார் கள். அப்படி ஏதாவது இருக்குமானால், நம்முடைய தேசத்துக்கு இல்லாமல், அங்கே அனுப்புவதாலே ஏற்பட்ட குறை இது.

22nd January 1964] [திரு. கே. பாலசுப்ரமணிய அய்யர்]

அமெரிக்க அரிசியைத் தவிர நம்முடைய அரிசியையும் உற்பத்தி பண்ணுகிறவர்களிடம் இப்போதே வாங்கி, அந்த அரிசியைக் கொடுக்கிறதுக்கு அரசாங்கம் உதவி செய்யலாம். பல தேசத்தில் அவ்வாறு செய்கிறார்கள். பணம் கொஞ்சம் அதிகம் என்றாலும், இனிமேல் அதிலேயும் கொஞ்சம் அரசாங்கம் கவனிக்கனும் என்று சொல்கிறேன். அது ரொம்பவும் முக்கியமானது.

அடுத்தபடியாக, நெல்லை அதிகம் உற்பத்தி பண்ணுவதற்கான ஏற்பாடு செய்வது. உற்பத்தியானவர்களுக்கு முக்கியமாகப் பணம் இல்லை. அதைத் தான் முக்கியமாகக் கவனிக்கணும். அதுவும் காலாகாலத்தில் உதவி பண்ணணும், நிலச்சுவான்தார்ருக்கும், விவசாயிக்கும் காலாகாலத்தில் பணம் கொடுக்கணும். Crop insurance பற்றிச் சொன்னார்கள் ஒரு crop Securing ஆக வைத்து, இதை முக்கியமாகப் பரிசீலனை பண்ணணும். அந்தச் தக் காலத்தில் விவசாயிகளுக்கு உபயோகமாக, பணத்தை சீக்கிரமாக, Co-operative society அந்த முறையில் ஆசை இருந்தால், அந்த முறையிலேயே செய்யுங்கள். எந்த முறையில் இருந்தாலும், அவர்களுக்கு அது உடனடியாகக் கிடைக்கும்படியான நிலை ஏற்படவேண்டும். என்கிறதை முக்கியமாக வற்புறுத்திச் சொல்கிறேன். அது என்றைக்கு அமுலுக்கு வருகிறதோ, அன்றைக்குத்தான் உற்பத்தி அதிகம் ஆகும், அதைப் பற்றிச் சந்தேகமே கிடையாது. அது இன்னமும் வரவில்லை. அதற்குப் பல காரணங்கள் உண்டு. அதனால் தான் நாம் முன் பணம் கொடுத்து, பின்னால் வாங்குவதற்குப் பல முயற்சிகளை நாம் எடுத்துக் கொள்ள வேண்டும். பயிர் இன்ஷூரன்ஸ் என்பது முதல் காரியம். இரண்டாவது crop security முக்கியமான காரியம்.

இந்த 17-வது அமெண்டுமெண்டைப் பார்த்தால் பயமாக இருக்கிறது. புதுப் புது சட்டங்களைக் கொண்டுவந்து ஜனங்களுக்கு கவலை உண்டுபண்ணுகிறார்கள். நான் வணக்கமாகக் கேட்பது வாய்மூடிண்டு இருந்தால் தேவலை என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

நம் தேசத்திலே ஒரு பெரிய குறை இருக்கிறது. ஆரோக்கியத்திற்குக் கெடுதல் வருகிற சமயத்தில் ஆஸ்பத்திரிக்குப் போனால் நோயாளிகளைப் பார்க்கிற கவனம் குறைந்து விடுகிறது. பலபேர் சொல்வதை நான் சொல்றேன். யார் பேரிலோ தப்போ என்னவோ சொல்ல முடியாது. ஜனங்கள் ஆஸ்பத்திரிக்குப் போறது என்று சொன்னால், கடைசி காலத்தில் போறது என்று சொல்லுகிறார்களே தவிர, திரும்பி வருவோம் என்று பேசுவதாக இல்லை. ஏழைகள் எல்லாம் என்கிட்டே வேலை செய்யறவங்க ஆஸ்பத்திரியில் இருக்கிற அதிகாரிகளுக்கு லெட்டர் கொடுங்க என்று சொல்லுகிறார்கள். என்னுடைய மோட்டார் ஓட்டுகிறவனுக்குக் கெடுதல் வந்த சமயத்திலே, இவாள் பிள்ளை தான் வேலையில் இருக்கிறார். கடுதாசி கொடுத்தேன். அங்கு ஏகக் கூட்டம் இருப்பதால் பார்க்க முடியவில்லை போல் இருக்கிறது. ஒருத்தருக்கு கையில் அடிப்பட்டது.

டாக்டரிடம் போனால் சுத்தி வெச்சுக்கோ நாளைக்கு வா பார்க்கலாம் என்கிறார்கள். நாளைக்குத் திரும்பி வரும் நிலையில் இருக்கிறார்களோ என்னவோ. அப்படிச் சொல்லுவது தப்பாகப் பட்டது. சாதாரணமாக பொது மக்களுடைய அபிப்பிராயத்திலே ஆஸ்பத்திரியிலே ஏழைகளாக இருப்பவர்களைக் கவனிப்பதில்லை என்ற குறை தான். இதைப் பரிசிலனை பண்றதுக்கு கூட்டத்தை பிற்பாடு ஒரு தடவை வெச்சுக்கிட்டால் கூடத் தேவலை. நல்லது கூட்டம் ஜாஸ்தியாக இருக்கிறது, அதனால் அவர்களால் கவனிக்க முடியவில்லை.

தவிர்த்து திருச்சி, நார்த் ஆற்காடு எல்லா ஊர்களிலேயும் காலரா. ரொம்ப நஷ்டம் ஏற்பட்டது. காலரா இல்லை என்ற காலம் வந்து விட்ட சமயத்தில் இப்படி இருப்பது கவனிக்க வேண்டிய விஷயம் என்று நினைக்கிறேன்.

டெமாக்ரஸியில் சோஷலிஸம் என்பது சாத்தியம் இல்லை. சோஷலிஸம் என்ற வார்த்தைக்கு என்ன அர்த்தம். யு.எஸ்.எஸ். ஆர். யுனைடெட் சோவியத் சோஷலிஸ்டு ரிபப்ளிக். சோஷலிஸம் என்பது அவர்களுடைய வார்த்தை. சோஷலிசம் என்பது கம்யூனிஸத்திற்குத்தான் வரும். அதன்கிட்டே தான் போய்ச் சேரும். கொஞ்சம் என்று சொல்றது சாதாரணமான பேச்சு.

2-40 p.m. சோஷலிஸம் என்ற சொல்லை டெமாக்ரடிக் பிரேம்வொர்க்கில் என்று சொல்ல முடியாது என்று சொல்றேன்.

ஜனங்களுடைய முயற்சி அதிகமாக இருந்தால் எல்லாம் சாதிக்க முடியும். ஸ்டேட் எல்லாம் மனுஷன் தான். ஸ்டேட் என்றால் 3 பேர் 4 பேர் செய்யற முடிவு தான். போன தடவை நம்முடைய தலைவர் எழுதினார். இந்த மாதிரி டாக்மாவை விட்டு விட்டு நீங்கள் யார்யார் வேலை செய்கிறார்களோ அவர்களுக்குப் பணம் கொடுக்கத் தயாராக இருக்கிறோம் என்றார். ஏதாவது ஒரு காரியம் பண்றதுக்கு முன்னாலே பேசற பேச்சு அந்தப் பேச்சினால் நாம் மாறக் கூடாது. ஜப்பான் செய்யறது என்றால் நம்மால் செய்ய முடியாதா. நாம் கொஞ்சம் பெரிய ஸ்டேட். அதனால் இந்த டாக்மாவை விட்டு விட்டு யார் எவ்வளவு செய்யறாளோ அதற்குப் பணம் கொடுத்தா நல்ல திட்டம் வரட்டும் எல்லாம் செய்யட்டும். இந்த ஏற்பாடு பண்ணினால் நன்றாக இருக்கும்.

**திரு. எஸ். கே. சம்பந்தன் :** கனம் தலைவர் அவர்களே, இந்த கவர்னர் உரை அவ்வளவு திருப்திகாமாக இல்லை என்று எதிர்க் கட்சித் துணைத் தலைவர் கே. பாலசுப்பிரமனிய அய்யர் சொல்லியதை நான் ஆதரிப்பதோடு மற்ற பேச்சுகளையும் முழுதாக ஆதரிக்கிறேன் என்றும் சுருக்கமாகப் பேசுவேன் என்று முன்னறிக்கையாகச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். கவர்னர் உரையிலே திட்டங்கள் எல்லாம் துரிதமாக நிறைவேறி வருகின்றன என்று குறிப்பிட்டிருக்கிறார். எனக்கு அதிலே ஒரே ஒரு சந்தேகம்தான். திட்டங்கள் மக்களுடைய நன்மைக்காக நிறைவேற்றப்படுகின்றன. பணம் செலவழிக்கப்பட்டு நிறைவேற்றப் படுகின்றன. பணம்தான் துரிதமாகச் செலவழிக்கப்படுகிறது.

செலவழிக்கப்படுகிற பணம் மக்களுக்குப் பிரயோசனப் படுகிறதா, துரிதமான அளவுக்கு என்ற சந்தேகத்தைத்தான் நான் இப்போது கிளப்பி அதை அரசாங்கம் ஆலோசிக்கும்படி சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

முக்கியமாக விவசாயத்தைப் பற்றி எல்லோருமே குறிப் பிட்டார்கள். முக்கியமாக விளை பொருள்களுடைய விலைவாசி களைப் பற்றி எல்லோருமே குறிப்பிட்டார்கள். நான் அதிகமாக அதைப் பற்றி மேலும் விவரித்துக் கொண்டு பொக விரும்பவில்லை. இன்று தென்னுற்காடு மாவட்டத்திலே விவசாய அபிவிருத்திக்கு, மற்ற விளைபொருள்களுக்கு மான்யூர்—எரு கொடுத்து வரப் படுகிறது. இந்த எரு முக்கியமாக ஒரு சில பகுதிகளிலே மாதிரி பிளாக்குகளுக்கு எடுத்துக் கொண்டு மணிலாக்கொட்டைக்கு இரண்டு முறையாகக் கொடுத்து வருகிறுர்கள். அந்த எருவைப் போட்டு எந்த விதமான பலனும் கிடைக்கவில்லை என்று மாவட்டம் பூராவிலும் அபிப்பிராயம் கொண்ட கருத்து உடையவர்களாக இருக்கிறுர்கள் என்பதை அமைச்சர்களுக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். மாவட்டத்தில் உள்ள மக்கள் மட்டும் இந்த எண்ணத்தோடு இல்லை. விவசாய இலாகாவினரும் இந்த எண்ணத்திலே இருந்து கொண்டு முன்னுலே கிடைத்த எரு சரியான எரு அல்ல வேறு எரு கொடுக்கிறேம் என்று சொல்கிறுர் கள். இந்த மாதிரி சரியாகப் பரீக்ஷார்த்தம் செய்யாமல் முன்னு லேயும் பரீக்ஷார்த்தம் செய்யாமல் அதிகமாகப் பணம் செலவழிக் கப்பட்டு அவ்வளவு பணமும் செலவழித்து விட்டோம் என்று சொல்லிவிட்டால், மக்களும் திருப்தி அடைய முடியாது, அர சாங்கமும் திருப்தி அடைய முடியாது என்று சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, அந்திய அரசாங்கம் சொல்பவைகள் மாநில மக்களுக்கு உகந்ததாக இல்லையென்றுலும் அவற்றைக் தட்டிக் கேட்காமல் அல்லது எடுத்துச் சொல்லாமல் வந்துவிடுவது கூடாது என்று சொல்ல விரும்புகிறேன். நமது மாநிலத்தில் தொழில் துறையில் அதிக முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது, மற்ற மாநிலங் களைப் பார்க்கிலும் முன்னேறியிருக்கிறது என்பது எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடியது. இன்னும் அதிக அளவில் தொழில் துறையில் முன்னேறியிருக்கும். மத்திய அரசாங்கம் நமது அர சாங்கம் கேட்பதை நியாயமானதைத்தான் இவர்கள் கேட்கிறுர் கள், அவற்றை கொடுத்திருந்தால் இன்னும் அதிகமாக முன்னேறி யிருக்கும். நமது தொழில் அமைச்சர் அவர்கள் நியாயமான வற்றைத்தான் அவர்களிடம் கேட்கிறுர்கள். ஆனுல் அவர்கள் பல தடவைகளை ஏற்படுத்தி பல சாக்குபோக்குகளைச் சொல்லிக் கொண்டு சரியான காரணம் காட்டாமல் இருந்துவருகிறுர்கள். ஆகையல் இதில் நமது அரசாங்கம் தீவிரமாக தைரியமாக இருந்து அவர்கள் போக்கை எடுத்துச் சொல்லி சண்டை போட்டு கேட்கவேண்டுமென்று சொல்லிக்கொள்கிறேன். மேலும் மத்திய அரசாங்கத்திடமிருந்து பெறுபவை நமது மாநிலத்தில் சரியான வழியில் செய்யப்படுகிறதா என்றும் யோசிக்கவேண்டும். எதிர்க கட்சித் துணைத் தலைவர் அவர்கள் கூட சொன்னுர்கள் 'டாக்மேட்டி

[திரு. எஸ். கே. சம்பந்தன்] [22nd January 1964

சம்' என்று, அப்படியில்லாமல் சாத்தியப்படக்கூடியவற்றை எல்லாம் அமுலுக்குக் கொண்டுவரவேண்டுமென்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். குறிப்பாக நமது மாநிலம் தான் இந்தியாவில் உள்ள மற்ற மாநிலங்களைவிட நூற்பு ஆலைகள் அதிகம் உள்ளது. மேலும் மேலும் நூற்பு ஆலைகள் ஏற்படவேண்டும். அதில் தயாராகக்கூடிய நூல்கள் செலவாவதற்கு நமது மாநிலத்தில் தான் சாத்தியக் கூறுகள் அதிமாக உள்ளன. நமது அரசாங்கம் அதிகமான கதிர்களைக் கேட்டு மத்திய அரசாங்கம் மூன்றாவது திட்டத்தில் 75 ஆயிரம் கதிர்கள் தனியார் துறையில் போட்டுக் கொள்ளலாம் என்று அனுமதித்திருக்கிறது. நமது அரசாங்கம் கேட்டது மிகமிகக் குறைவுதான். அப்படி இருந்தும் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இரண்டு ஆண்டுகளுக்கு மேல் போய் விட்டாலும், இன்னும் அந்த 75 ஆயிரம் கதிர்களை எப்படி நமது மாநிலத்தில் உபயோகப்படுத்துவது என்ற முடிவுக்கு வராமல் இருப்பதை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இப்போதுதான் கடந்த இரண்டு மாதங்களில் ஏதோ சிபாரிசு செய்து மத்திய அரசாங்கத்திற்கு அனுப்பியிருக்கிறார்கள் என்று தெரிகிறது. அது வும் எந்தவிதமான சிபாரிசு என்று அறிந்துகொள்ள முடியவில்லை என்று நினைக்கிறேன். அவைகளை அமைச்சர் அவர்களது பேச்சி லிருந்து தெரிந்துகொள்ளவேண்டியிருக்கிறது. நாங்கள் அரசாங்கத்தின் கொள்கைக்கு உரிய முறையில் கூடியவரையில் புள்ளி விவரங்களுக்கு ஒரு சில காரியங்களைச் செய்தாலும் அதைவிட நல்லமுறையில் செய்யப்போகிறோம் என்று சங்கத்தின் மூலமாக விண்ணப்பம் அனுப்பி பல மாதங்கள் ஆகின்றன. இதற்கு நாளது வரையில் எந்தவிதமான தகவலும் அரசாங்கம் அனுப் பாதது மிக வருந்தத்தக்கது. அந்த மாதிரி விஷயத்தில் திருத்த மான நடவடிக்கை எடுத்து உங்களுக்குக் கொடுக்க முடியும் என்றால் கொடுக்கலாம். கூட்டுறவுத் துறையில் அல்லது வேறு வகையில் செய்யப்போகிறோம் என்று முடிவானால் அதையும் சொல்லிவிட வேண்டும். அனாவசியமாக இரண்டு ஆண்டுகளாக இவ்வளவு கதிர்களை வைத்துக்கொண்டு தொழில் துறையில் திட்டம் வகுப்பது தவறு. ஆகையால் எவ்வளவு மத்திய அரசாங்கத்திடமிருந்து பெறமுடியுமோ அதைப் பெற வேண்டும். மத்திய அரசாங்கம் பல துறைகளில் பல கோடிக்கணக்கான பணத்தை விரயம் செய்யாமல் பொதுநல உணர்வோடு செயல்புரிய வருகிறவர்களுக்கு இடையூறாக இருக்கிறார்கள் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். முக்கிய மாக திட்டங்களை அமுல் படுத்துவதில் அப்படி நடந்துவருகிறது. முக்கியமாக நமது அரசாங்கம் கைத்தறியாளர்களுக்குக் கஷ்டம் வருங்காலத்தில் பண உதவி செய்வதற்கு ஹாண்ட்லூம் ஃபைனான்ஸ் கார்ப்பரேஷன் ஏற்படுத்தவேண்டுமென்று இரண்டு மூன்று ஆண்டுகளாகத் திட்டம் தயார் செய்து மத்திய அரசாங்கத்திற்கு விண்ணப்பித்துக்கொண்டு அவர்களுடைய ஆதரவைத் தேடிக் கொண்டிருக்கிறது. இது நியாயமான கோரிக்கை. கோடிக் கணக்கான பணம் தேவையில்லை. ஒரு சில லட்சக்கணக்கான பணம்தான் தேவை. ரிசர்வ் பாங்கு தடை போடுகிறது என்று அரசாங்கம் எங்களைப் போன்றவர்களுக்குப் பதில் சொல்கிறது.

22nd January 1964] [திரு. எஸ். கே. சம்பந்தன்]

மத்திய அரசாங்கம் ஏன் இதுபோன்ற சிறுசிறு விஷயங்களுக்கெல்லாம் தடைபோட வேண்டுமென்பதை எடுத்துச் சொல்லி காரியங்களைச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, பொதுவாகவே டாக்டர் சிவானந்தம் அவர்களும் அதில் ஈடுபட்டிருக்கிற நண்பர் எஸ்.ஆர்.பி. பொன்னுசாமி செட்டியார் அவர்களும் எடுத்துச் சொன்னார்கள். வெளிநாட்டிலும் அயல் நாட்டிலும் நமக்கு அதிகமான வாய்ப்புகள் இருந்துவருகின்றன. அதைக் கவனித்து நல்லமுறையில் அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக் கொள்ளவில்லை என்பதை நான் சொல்ல ஆசைப்படுகிறேன். உதாரணமாக திரு. பொன்னுசாமி செட்டியார் அவர்கள் கூட ஒரு அட்வைசரி கமிட்டி மாநில ரீதியில் இருந்தால் நல்லது என்று சொன்னார்கள். இப்போது அகில இந்திய ரீதியிலே ஏற்றுமதிக்காக ஆலோசனைக் குழு இருக்கிறது. அதை நிர்வகிக்க அதில் யார் யார் இருக்கிறார்கள் என்று கேட்டால் அது சிரிப்புக்குள்ளாகும் ஒன்று ஆகும். சென்னை மாநிலத்திலிருந்து ஏற்றுமதி செய்யும் துணியில் 90 சதவிகிதத்துக்கு மேல் பருத்தி நூல் துணிகள் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. அப்படியிருந்தும் அந்தக் கைத்தறி ஏற்றுமதி ஆலோசனைக் குழுவில் ஒரு அங்கத்தினர் கூட நேரடியாக ஏற்றுமதியில் சம்பந்தப்பட்டவர்கள் இல்லை என்று சொன்னால், இதைவிட வெட்கக்கேடான சிரிப்புக்குள்ளான சமாசாரம், வருந்தக்கூடிய சமாசாரம் இருக்கமுடியாது. மத்திய அரசாங்கத்திலுள்ள அமைச்சர்களுக்கோ அல்லது அலுவலர்களுக்கோ வேண்டியவர்களாக இருந்தால், கைத்தறிக்கும் அவர்களுக்கும், சம்பந்தம் இல்லாவிட்டாலும் அக்குழுவில் போட்டு நடத்தி வருகிறார்கள். இப்படி காரியங்களைச் செய்தால், எப்படி ஏற்றுமதி விஸ்தரிப்பு அடையும் என்று புரிந்து கொள்ளமுடியவில்லை. சென்னையில் கூட வீவர்ஸ் சர்வீஸ் செண்டர் என்று மத்திய அரசாங்கத்தின் உதவியினால் ஒரு நிறுவனம் நடந்துவருகிறது. நெசவாளர்களுக்கு உதவி செய்வதற்கு அது இருக்கிறது. அமெரிக்க நாட்டுக்கு ஏற்றுமதி செய்யக்கூடிய நிறுவனம். அதற்கு எக்சிகியூடிவ் டைரக்டர் முக்கியமாக இருக்கிறார். அந்த அம்மையார் அமெரிக்காவுக்குச் சென்று வந்தாலும் கூட அமெரிக்காவுக்கு எந்த விதமான துணிகள் தேவை என்பதைப் பற்றி எந்தவிதமான தகவலும் இன்றுவரையிலும் சொல்லியதாகத் தெரியவில்லை. என்றுமே தொழிலுக்கு உதவியாக இல்லாத நிறுவனங்களில் மத்திய அரசாங்கம் பல லட்சக் கணக்கான ரூபாய்களைச் செலவு செய்து கைத்தறிக்குத்தான் அவை செலவழிக்கப்படுகின்றன என்று சொல்கிறார்கள். இதைப் பார்த்துக்கொண்டு நமது அரசாங்கம் சும்மாயிருக்கலாமா என்று கேட்டுக்கொள்கிறேன். இதையெல்லாம் பயமின்றி எடுத்துச் சொல்லி அதனால் பயன் பெற்றால் மாநிலத்திற்கு நல்லது. இல்லாவிட்டால் அதை எடுத்துவிடுவது நல்லது என்று அரசாங்கம் சிபாரிசு செய்தால் நல்லது. 12-50 p.m

அடுத்து, சமதர்ம சமுதாயத்தைப்பற்றிக் குறிப்பிட்டார்கள். சமதர்மத்தின் மீது உண்மையாகவே அரசாங்கத்திற்கு நம்பிக்கையிருந்தால், முதலில் மத்திய அரசாங்க சிப்பந்திகளுக்கும் மாநில

[திரு. எஸ். கே. சம்பந்தன்] [22nd January 1964

அரசாங்க சிப்பந்திகளுக்கும் எந்தவிதமான வேறுபாடுகளும் இல்லாது செய்தால், அவர்களுடைய உண்மையான எண்ணத்தைப் புரிந்துகொள்ளமுடியும். எதிர்க் கட்சித் தலைவர் அவர்கள் கூட குறிப்பிட்டார்கள். மத்திய அரசாங்கம் சிப்பந்திகளுக்கு அதிகப் படியாக 10 ரூபாய் மாதத்திற்குக் கொடுத்திருக்கிறது. மாநில அரசாங்க சிப்பந்திகளுக்கு கொடுப்பதற்கான வாய்ப்பு இருப்ப தாகத் தெரியவில்லை என்றார்கள். அதற்கு முன்பே மத்திய அர சாங்க, மாநில அரசாங்க சிப்பந்திகளிடையே பெருத்த வித்தியாசம் இருக்கிறது. ஒரே வேலையை, ஒரே நேரங்களில் செய்கிற ஒரே அரசாங்க அதாவது இந்திய அரசாங்க வேலையைச் செய்கிறவர்கள் என்று அவர்களை எடுத்துக்கொள்ளவேண்டும். அரசாங்க ஊழியர் களுக்குள்ளே வேறுபாடுகளை வைத்துக்கொண்டிருக்கிற அரசாங் கம் மக்களிடையே சீர்திருத்தத்தைக் கொண்டுவர முயற்சிப்பது வீணான முறையில் முயற்சிப்பது ஆகும் என்றும் அது சரியில்லை என்றும் சொல்லிக்கொள்கிறேன்.

முக்கியமாக இந்த வித்தியாசம் ஏன் இருக்கவேண்டும் என்று தெரியவில்லை. மத்திய அரசாங்க ஊழியர்களுக்கும் மாநில ஊழி யர்களுக்கும் வித்தியாசம் அதிகம் இல்லாத அளவுக்கு, முதலில் இந்த இரு அரசாங்கங்களும் முயற்சிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். தனியார் துறையில் வேலை செய்பவர்களுக்கும் அப்படித்தான் இருக்கவேண்டுமென்று அமைச்சர் கூறுகிறார்கள். தனியார் துறையில், அரசாங்க சிப்பந்திகளை விட அதிகக் கடுமை யாகவும், உண்மையாகவும் வேலை செய்கிறார்கள். அதற்குத் தகுந்த வாறு அதிக ஊதியம் பெறுகிறார்கள், உழைக்காமலே பெற்று விட வில்லை என்பதை நமது அமைச்சர் அவர்களுக்கு, இந்தச் சந்தர்ப் பத்தில் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

**கனம் திரு. ஆர். வெங்கட்டராமன் :** சர்க்கார் ஊழியர்கள் குறைவாகப் பெறுவதைப் பற்றிச் சொன்னார். தனியார் துறையில் கூட வித்தியாசம் இருக்கத் தான் செய்கிறது.

**திரு. எஸ். கே. சம்பந்தன் :** நம் நாட்டில் **S.S.L.C.** படித்த வர்கள் தான் பெரும்பாலும் அரசாங்க வேலைகளுக்குப் போக வேண்டுமென்று எண்ணுகிறார்களே தவிர, மற்ற அதிகம் படித்தவர் கள் இதற்கு வருவதில்லை. சாதாரணமாக டாக்டருக்குப் படித்த வர்கள் எப்படி அரசாங்க வேலைக்குப் போகாமல் தனிப்பட்ட முறையில் தொழில் நடத்த விரும்புகிறார்களோ, அதே போல் தான் தனியார் தொழிலில் நன்கு படித்தவர்கள் சேர்ந்து கொள்ள விருப் பப்படுகின்றார்கள். இப்போது படித்தவர்களுக்கு, அரசாங்க வேலை வேண்டுமா. **Burma-Shell,** பாங்குகள் போன்ற நிறு வனங்களில் வேலை வேண்டுமா என்றால், தனியார் நடத்தும் நிறு வனங்களுக்குத் தான் செல்வார்களே தவிர, அரசாங்க வேலைக்கு வரமாட்டார்கள். அங்கே தான் உழைப்புக்குத் தகுந்த மதிப்பும், அதற்குத் தகுந்த ஊதியமும் கிடைக்கும் என்ற நம்பிக்கை இருக் கிறது. அந்த மாதிரி நம்பிக்கை அரசாங்க அலுவலகங்களில் இல்லை என்பதை வருத்தத்தோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

இன்னும் தேர்தலைக் குறிக்கோளாக வைத்து, செயலுக்கு ஒவ்வாத மக்கள் நலத்துக்குப் பயன்படாத காரியங்களை எல்லாம் மாநில அரசாங்கமும், மத்திய அரசாங்கமும் செய்வதில் ஈடுபடுகின்றன. கண்டிப்பாக அவ்வாறு ஈடுபடக்கூடாது என்று இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். இப்போது இருக்கிற அரசாங்கம் பொதுத்துறையில் உள்ள நிறுவனங்களை விட, தனியார் துறையில் இயங்கும் நிறுவனங்களைப் பல துறைகளில் அரசாங்கம் தேசீயமயமாக்க வேண்டும் என்று கூறி வருகிறது. இது சாதாரணமாக தேர்தலுக்கு வேண்டுமானால் பயன்படுமே தவிர, உண்மையில், மக்களுக்குப் பயன்படுவதற்கு ஒன்றும் செய்யவில்லை. உண்மையாக இருந்தால், எல்லாவற்றையும் தேசிய மயமாக்குவதை கண்டிப்பாக ஆதரிக்க முடியும். அதனால் மக்களுக்கு எந்த விதத்திலாவது நன்மை ஏற்படுமானால், எந்தத் திட்டமானாலும் அதை முழு மனதோடு ஆதரிப்பேன். இப்போது தேசீய மயமாக்கப்பட்ட தொழில்கள் அல்லது பொதுத் துறையில் நடத்தப்படுகின்ற தொழில்கள் பாதிக்கப்பட்டிருக்கிறதா என்பதையும் சீர்தூக்கிப் பார்க்க வேண்டும். பொதுத் துறையில் என்ன சலுகை கொடுக்கின்றோமோ, அதையே தனியார் துறைக்குக் கொடுத்தால், மக்களுக்கு அது பயன்படும். அரசாங்கத்திற்கு எவ்வளவு வருவாய் பெருகும் என்று சீர்தூக்கிப் பார்த்து, அப்படிச் செய்தால் மக்களுக்கும் நன்மை, அதே நேரத்தில் அரசாங்கத்துக்கும் வருமானம் பெருகுமானால், அதற்கு எந்த விதமான தடையும் எவராலும் சொல்ல முடியாது. எல்லா உடமைகளையும் எல்லாத் தொழில்களையும் தேசிய மயமாக்குவதானால், இந்தக் குறிக் கோளுடன் செய்ய வேண்டும் என்றுதான் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

நேற்று எதிர்க் கட்சித் தலைவர் குறிப்பெடுத்துக் கூறினர் புள்ளி விவரங்கள். இன்னும் ஒரு சில புள்ளி விவரங்களைத் தினசரி பேப்பர்களில் பார்த்தோம். மத்திய நிதி அமைச்சர் தந்த புள்ளி விவரம், 43 நிறுவனங்கள் பொதுத் துறையில் உள்ளதை எடுத்துக் கொண்டு பரிசிலனை செய்ததில், ஒரே ஒரு நிறுவனம் தான் லாபகரமாகச் செயல்பட்டிருக்கிறது என்று மற்ற துறைகள் எல்லாம் என்ன வாயிற்று? ஏன் இவ்வளவு நஷ்டத்தில் வேலை செய்கின்றனர் என்பதைப் பற்றி அரசாங்கத்தைக் கேட்கிறேன். மக்களுக்கு அந்தத் திட்டத்தினால், தனியார் துறை செய்வதை விட அதிகப்படியான நன்மை ஏதாகிலும் ஏற்பட்டிருக்கிறதா என்று பார்த்தோமானால், நிச்சயமாக இல்லை. ஒரு **Per cent** கூட கூடுதலாக நன்மை கிடையாது. அதை விட பாதகம் தான் என்று நான் எடுத்துக் கூற விரும்புகிறேன். பாங்குகளைத் தேசிய மயமாக்க வேண்டுமென்று முழங்குவது, அல்லது இது போன்ற தொழில்களைத் தேசிய மயமாக்க வேண்டுமென்று சொல்லி வருவது, விரும்பத் தக்கது அல்ல. அதை நமது மாநில அரசாங்கம் உணர்ந்து பார்க்க வேண்டுமென்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

*[திரு. எஸ். கே. சம்பந்தன்]* [22nd January 1964

நண்பர் கரையாளர் குறிப்பிட்டுச் சொன்னார்கள், முக்கியமான **Steel Industries** போன்ற தொழில்களை முதலாவதாக எடுத்துக் கொண்டு பிறகு படிப்படையாகப் போகலாம் என்று. அப்படிப் பட்ட காரியத்தை, நாட்டிலே தொழில்களைத் தேசியமயம் ஆக்குவதற்கு இந்த முறையைத்தான் கடைப் பிடிக்க வேண்டும். பஸ்களை ஓட்டுவது, அரிசி மில்களையும் தேசிய மயமாக்க வேண்டுமென்பதில், அரசாங்கம் மக்கள் நலத்துக்கு விரோதமாகச் செயல் படுத்தக் கூடாதென்று சொல்லிக் கொண்டு, மேற்கொண்டு, ஒன்றை மட்டும் சொல்லிக் கொள்கிறேன்.

1-00 p.m. துணைத் தலைவர் அவர்கள் குறிப்பிட்டார்கள், சட்ட சபைக்கு ஆசிரியர்கள் சார்பாக தேர்ந்து எடுப்பதில், அந்தத் தொகுதி பற்றி ஏதோ மாறுதல் செய்வதற்கு நமது அரசாங்கம், தங்களுடைய ஒப்புதலைத் தெரிவித்து இருக்கிறது என்று. அப்படி இருக்குமானால், அது மிக மிக வருந்தத்தக்கதுதான். ஆசிரியர்களின் நலனை அனுசரித்து, இந்தச் சட்டசபையின் மெம்பரை ஏற்படுத்தி இருக்க, அதை மாற்றுவதற்கு எந்த விதமான காரணமும் இல்லை. என்னைப் போன்றவர்களால் என்ன காரணம் என்று புரிந்து கொள்வதற்கில்லை. ஏதாவது மாற்ற வேண்டுமென்றால், முன்னாலேயே சொல்லி இருந்தால் கூட, மாற்று யோசனை தெரிவித்திருக்கலாம். தனிப்படச் செய்வது உகந்ததல்ல. அந்த மாதிரி ஆசிரியர்களுக்குப் பிரதிநிதித்துவம் இல்லாமல் செய்வதைத் தடுக்க வேண்டும் அரசாங்கம் என்று கூறிக் கொள்வதோடு, என் உரையை முடித்துக் கொள்கிறேன். நன்றி.

**வித்துவான் தி. முத்துகண்ணப்பன்:** *தலைவர் அவர்களே, நம்முடைய கவர்னர் பெருமகனாருடைய உரையினை மெத்த மகிழ்ச்சியோடு ஆதரித்து, ஒரு சில வார்த்தைகள் சொல்லி முடித்துக் கொள்கிறேன். அதிர்ஷ்டவசமாக, நம்முடைய கவர்னர் பெருமகனார் கண்யம், தெய்வ பக்தி ஆகிய பண்பு வாய்ந்தவராக இருப்பது பாராட்டத்தக்கது. நமக்கு வரும் கவர்னர் எல்லாருமே பெரும்பாலும் அப்படியே தானிருக்கிறார்கள். அது நாம் செய்த புண்ணியம் என்றுதான் நான் நினைக்கின்றேன். கண்யத்தால் உயர்ந்தவர் என்பதை இந்த உரையே நன்கு காட்டுகிறது. இங்கே நேற்று, எனது மதிப்புக்குரிய நண்பர்* **M. G.** *ராமச்சந்திரன் அவர்கள் கூட புகழ்ந்து பேசினார்கள். பல கட்சிகளைச் சேர்ந்தவர்களும் ஒத்துழைப்பையும் உதவியையும் கொடுத்துள்ளார்கள் என்ற கருத்தை கவர்னர் அவர்கள் தெரிவித்தார்கள். இதிலிருந்து உண்மையிலேயே எவ்வளவு தூரம் கண்யமும், பண்பாடும் உள்ளவராக இருக்கிறார் என்பது தெரிகிறது. ஆனால் அதை அடுத்து ஒரு வார்த்தை சொல்லியிருக்கிறார்கள். அது எவ்வளவு தூரம் கவர்னர் பெருமானுடைய மனதைப் புண்படுத்தி இருக்கிறது என்பது மிக நன்றாகப்பிரதிபலித்து இருக்கின்றது. இந்த நாட்டு அரசாங்கம் பூரண பேச்சு உரிமையும், செயல் உரிமையும் தொடர்ந்து வழங்கி வரும். ஆனால் நமது அரசியல் சாஸனத்தில் வழங்கப்பட்டிருப்பதை எந்தக் கிளர்ச்சியினாலும்*

22nd January 1964] [வித்துவான் தி. முத்துக்கண்ணப்பன்]

அழிக்க முடியாது என்று அவர் குறிப்பிட்டிருப்பதை மிக மிக நன்றாக ஆழ்ந்து அலசிப் பார்க்க வேண்டும். பார்த்து உணர வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

இந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு சில முக்கியமான வார்த்தைகளைக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். கல்லூரி மாணவர்கள் எல்லாம், தங்களுடைய கல்லூரிகளிலிருந்து வெளி வந்து, ஊர்வலம் செல்ல ஆரம்பித்தது, உண்மையிலேயே புண்படுத்தக் கூடிய ஒரு நிகழ்ச்சி. நம்முடைய கல்லூரி மாணவர்கள், ஒழுக்கத்திலும் கட்டுப்பாட்டிலும், நல்ல உயர்ந்த பண்பாட்டிலும் மேம்பட்டவர்கள், அதை யாராலும் மறுக்க முடியாது, மறைக்கவும் முடியாது. அதெற்கெல்லாம் காரணம் நம்முடைய மதிப்புக்குரிய எதிர்க் கட்சித் தலைவர், முதலியார் போன்றவர்கள் இப்போது பல்கலைக் கழகத் துணை வேந்தராக பணியாற்றுவதுதான் என்று சொன்னால், அது மிகையாகாது. இவ்வளவு ஒழுக்கத்திலும், பண்பாட்டிலும், கட்டுப்பாட்டிலும் சிறந்த கல்லூரி மாணவர்கள், இப்படி எல்லாம் அண்மையில் நடந்து கொண்டதால், அவர்களுக்கு என்ன பயன்?

ஒரு அரசியல் கட்சியைச் சேர்ந்தவர்கள் இப்படியெல்லாம் தூண்டி விடுகிறார்கள் என்று நினைக்கும்போது வேதனையாக இருக்கிறது. இவ்வளவும் செய்து விட்டு மாணவர்கள் அரசியலிலே பங்கு கொள்ளக் கூடாது, அரசியலிலே ஈடுபடக் கூடாது என்று பேசவும் செய்கிறார்கள். சொல்லுவது ஒன்று செய்வது ஒன்றாக இருக்கிறது. படிப்பது திருவாசகம் இடிப்பது சிவன் கோயில். மாணவர்கள் விஷயத்தில் அரசியல் வாதிகள் தலையிடாமல் இருப்பது நல்லது என்று கூறிக் கொள்ள விரும்புகிறேன். மாணவர்கள் இந்தியை எதிர்த்துக் கிளர்ச்சி செய்கிறார்கள் என்று கேள்விப்பட்டேன். எனக்கு அது புரியவில்லை. நம்முடைய இந்த மாநிலத்திலே மாநில அரசாங்கம் தாய் மொழியான தமிழ் மொழிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருகிறது. மற்ற எந்த மாநிலத்திலும் அளிக்காத அளவுக்கு ஆதரவு அளிக்கிறார்கள். படிக்க வேண்டும் என்று சொல்லுகிறார்களே தவிர வற்புறுத்துகிறார்கள். மறைமுகமாக திணிக்கிறார்கள் என்று சொல்வது தவறு. இந்தியைப் படிக்கிறவர்கள் படிக்கட்டும் என்று சொல்லுகிறார்கள். திணிக்க வேண்டும் என்று எப்போதும் சொல்லவில்லை. எஸ்.எஸ்.எல்.ஸிக்குப் பாடமாக வைத்திருக்கிறார்கள். இந்தப் பாடத்தில் தகுதிக்குரிய மார்க்கு வாங்க வேண்டும் என்ற நிபந்தனை கிடையாது. அப்படிச் சிறந்த முறையிலே இந்தி படிக்கிற மாணவர்கள் படிக்கட்டும் என்ற பெருந்தன்மையோடு வைத்திருக்கிறார்கள். இதை எடுத்துக் கொண்டு தப்பான முறையிலே அரசியல் வாதிகள் திணிக்கிறார்கள், வற்புறுத்துகிறார்கள் என்று சொல்வது பொருந்தாத வாதம். ஏதோ மனதில் வைத்துக் கொண்டு அடித் தளத்திலே எதையோ வைத்துக் கொண்டு பழி சுமத்த நினைப்பது நேர்மை ஆகாது, நியாயம் ஆகாது என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

அரசாங்க பஸ் போக்குவரத்தைப்பற்றி ஒரு சில வார்த்தைகள். அந்தப் பொறுப்பை மேற்கொண்டிருக்கும் அமைச்சர் அவர்கள் அறிவிலும் ஆற்றலிலும் நிர்வாகத்திலும் சிறந்தவர். அவருடைய

[வித்துவான் கி. முத்துக்கண்ணப்பன்] [22nd January 1964

முன்னிலையிலே சொன்னால் தக்க பலன் இருக்கும் என்று ஒருசில கருத்துக்களை வெளியிட விரும்புகிறேன். நான் வாரத்திலே 15—20 மணி நேரம் பஸ்சில் பிரயாணம் செய்கிறவன். இப்போது நூற்றுக்கணக்கான பஸ்கள் விட்டிருக்கிறார்கள். ஜனங்களுடைய நெரிசலை எவ்வளவுக் கெவ்வளவு சமாளிக்க முடியுமோ அந்த அளவுக்கு நல்ல முறையிலே அதிகப்படியான முறையிலே எவ்வளவு சௌகரியம் செய்ய முடியுமோ அவ்வளவு செய்திருககிறார்கள். ஆனால் பலகுறைபாடுகள் இருக்கின்றன. அடையாறை எடுத்துக் கொண்டால் 21-பி, 5 என்ற பஸ்கள் இருக்கின்றன. எந்த பஸ் முதலிலே போகிறது என்று யாருக்கும் தெரிவதில்லை. அது பெரிய தொல்லையாக இருக்கிறது. ஒவ்வொரு முறையும் போய் டைம் கீப்பரிடம் கேட்க்க வேண்டியிருக்கிறது. அவர் கூட மரியாதையாகச் சொல்லுவதில்லை. முன்னாலே இருக்கிற பஸ்சில் ஏறி உட்கார்ந்தால், கடைசியில் இருக்கிற பஸ் புறப்படுகிறது. ஒரு விளம்பரப் பலகை இருந்து, இந்த பஸ் இத்தனை மணிக்குப் புறப்படும் என்று குறிக்க ஏற்பாடு செய்தால் மிக நன்றாக இருக்கும். பொது மக்கள் கஷ்டப்படாமல் இருப்பார்கள். கண்டக்டருக்கு என்று தனி சிட்டு ஒதுக்கி வைதது இருக்கிறார்கள். வேண்டாம் என்று சொல்லவில்லை. சாதாரணமாக பஸ்சிலே நெருக்கடி அதிகமாக இருக்கிறது. விழுந்தடித்துக் கொண்டு ஏற வேண்டியிருக்கிறது. நான் கவனித்திருக்கிறேன். வயதான பிரயாணிகள், நோயாளிகள், பெண்கள் எல்லாம் வார்ப் பட்டையைப் பிடித்துக் கொண்டு ஊசலாடிக் கொண்டிருக்கும் போது கண்டக்டர்கள் அவர்களுடைய சிட்டுகளிலே நிம்மதியாக உட்கார்ந்து கொண்டு வருகிறார்கள். இது மிக சங்கடமான நிலைமையை உண்டாக்குகிறது. உட்காருவதற்கு அவர்களுக்கு நேரம் இல்லை என்றாலும் அவர்கள் அந்த சீட்டுகளில் உட்கார்ந்து கொண்டே கை நீட்டி பிரயாணிகளிடம் டிக்கட் கொடுக்கிறார்கள். நான் அனுபவித்து இதைச் சொல்கிறேன். கண்டக்டர் சீட்டு எது, பிரயாணி சீட்டு எது என்று தெரியாமல் இருக்கிறது. தவறி கண்டக்டர் சீட்டில் உட்கார்ந்துவிட்டால் 'முன்னே போ' என்று விரட்டுகிறார்கள். நான் இதை ஒரு நாள் டைரக்டரிடம் சொன்னேன். தொலைபேசி மூலம் சொன்னேன். இந்த மாதிரி ஒரு சீட்டு இருக்கிறதே. ஒரு சீட்டு அப்படி இருப்பதைக் குறை கூறவில்லை. வயதானவர்களும் பெண்களும் நோயாளிகளும் ஊசலாடி வரும்போது கண்டக்டர் உட்கார்ந்து வருவது நல்லதல்லவே என்றேன். அவர் என்னைத் திடீரென்று கேட்டார்.

"How many of you, gentlement are prepared to get up and offer seats to women and old people if they come and get into the bus ?" என்று.

அவர் ஆங்கிலத்திலே சொன்னதைச் சொன்னேன். எனக்கு அதிர்ச்சியாக இருந்தது. பழகிய ஆள்போல் நினைத்தார்போல் இருக்கிறது. தனி சீட்டு இருப்பதைப்பற்றிக் கூடச் சொல்லவில்லை. அந்த சீட்டு தனியாகக்கூட இல்லை. பிரயாணி சீட்டு கூட இருக்கிறது. எல்லோரும் உட்கார்ந்து இருந்தால் கண்டக்டரும் உட்கார்ந்து போகட்டும். மற்றவர்களுக்கு சௌகரியம் இல்லாதபோது கண்டக்டர் உட்காருவது சரி அல்ல.

22nd January 1964] [வித்துவான் தி. முத்துக்கண்ணப்பன்]

சர்க்கார் நீண்ட தூர பஸ்களை விட்டிருக்கிறார்கள். பாராட்டத்தக்க விஷயம். எந்த கஷ்டமும் இல்லாமல் சுகமாக அதில் பிரயாணம் செய்ய முடிகிறது. அதை எல்லோரும் வரவேற்கிறார்கள். அதிலே ஒரு சிறு ஏற்பாடு செய்தால் நன்றாக இருக்கும் என்று பிரயாணிகள் சொன்னார்கள். அந்த வண்டிகளிலே தனி இடமாக 'யூரினல்' போன்ற ஒதுக்குப் புறம் இருந்தால் நன்றாக இருக்கும். பஸ் ஒரு இடத்தை விட்டு இன்னொரு இடம் போய் நிற்க 3 மணி, 4 மணி நேரம் பிடிக்கிறது. அந்த இடத்திலும் 5 நிமிடத்திற்கு மேல் நிற்பதில்லை. எல்லோரும் அதற்குள் சென்று வர முடிவதில்லை. இந்த மாதிரி ஏற்பாடு அமைக்கவேண்டுமென்பது எல்லோருடைய விருப்பம் என்று சொல்லி மேலும் ஒரே ஒரு விஷயத்தைச் சொல்லி முடித்துக் கொள்ளுகிறேன்.

மீன் துறையைப் பற்றிச் சொல்லாமல் இருக்க முடியாது.

**கனம் திரு. ஆர். வெங்கட்டராமன்:** பட்ஜெட்டிலே இதையெல்லாம் சொல்லலாம்.

**வித்துவான் தி. முத்துக்கண்ணப்பன்:** அக்டோபர்-நவம்பர் மாதத்திலே படித்திருப்பீர்கள், 4 மீனவர் விசைப் படகிலே போனவர்கள் இறந்து விட்டார்கள். பரிதாபமாகச் செத்தார்கள். ஒரு படகு 28 நாட்களுக்குச் சிலோனில் 15 மைல் தூரத்திலே அலைந்து கொண்டிருந்து இருக்கிறது. நான் தேட வேண்டுமென்று சொன்னேன். 6-வது நாள் ஒருவர் இறந்தார். 15-வது நாள், 24-வது நாள், இப்படி 25-வது நாள்தான் ராமன் என்பவர் தப்பித்துக் கொண்டு வந்தார். ஜப்பான் கப்பல்—மலேயா சென்று கொண்டிருந்த கப்பல்—அதில் வந்து அவர் பிழைத்து வந்திருக்கிறார். முன்னே எப்படி நடக்கும் என்றால் எந்தப் படகாவது அடித்துக் கொண்டு போயிற்று என்றால் 'ஏரியல் சர்வே'—ஆகாய விமானத்தில் சென்று தேடுவார்கள். அப்படிச் செய்திருந்தால் அனாவசியமாக இந்த 4 உயிர்கள் போயிருக்காது. டிசம்பர் 29-ம் தேதி ஒரு விசைப் படகு—ஆளே இல்லாத விசைப் படகு கடலிலே மிதந்து கொண்டிருந்தது. இதையெல்லாம் நினைக்கிறபோது இந்த மீன் இலாகாவிலே சிக்கல்கள் இருக்கின்றன என்று தெளிவாகிறது. இதையெல்லாம் சரி செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்டு வாய்ப்பு கொடுத்த தலைவருக்கு நன்றி கூறி முடிக்கிறேன்.

**MR. CHAIRMAN: Sri A. Sambasiva Reddiar may now speak. He will conclude his speech by half past one.**

**திரு. ஏ. சாம்பசிவ ரெட்டியார்:** மதிப்பிற்குரிய மன்றத் தலைவர் அவர்களே, கவர்னர் பெருமான் உரையினைப் பாராட்டி சுருக்கமாக சிறிது பேச விரும்புகிறேன். அவர்களுடைய உரையிலே நெருக்கடி நிலையை நினைவுபடுத்தியது மிகவும் முக்கியமானது. எதிர்க்கட்சி துணைத் தலைவர் அவர்களும் அதைப்பற்றி வற்புறுத்திப் பேசினார்கள். அடுத்தபடியாக, முன்னாள் முதலமைச்சர் மதிப்பிற்குரிய காமராசர் அவர்களைப் பற்றிப் பாராட்டியிருக்கிறார். அதற்குச்

[திரு. ஏ. சாம்பசிவ ரெட்டியார்] [22nd January 1964

சொல்லியிருக்கும் காரணம் மிகவும் பொருத்தமானது. ஏழை எளியவர்களிடத்தில் இயல்பாகவே பரிவு உணர்ச்சி கொண்டவ ரென்று குறிப்பிட்டிருக்கிறார். இந்த சமயத்தில் நாடு முழுவதும் தேவைப்படும் உணர்வை அவர்கள் எடுத்துச் சுட்டிக்காட்டியிருக் கிறார்கள். அந்தக் காரணத்தால் கடந்த பல ஆண்டுகளாக நம் முடைய மாகாணத்தில் உயர்நிலைப்பள்ளிகள் 400, 500 என்பதி லிருந்து 1,500 என்ற அளவில் ஏற்படுத்தியிருக்கிறோம். அதில 11-வது வரை இலவசமாக கல்வி கொடுக்கவேண்டுமென்பது எங்களைப் போன்றவர்களின் கோரிக்கை. இன்று 10 சத விகிதம் மாணவர்கள்கூட முழுச் சம்பளம் கட்டுவது இல்லை. அதற்கு எல்லா மாணவர்களும் போய் தகுதித் தாள் பெறவேண்டியிருக்கிறது. எழுத்தாளர்கள், தலைமை ஆபீசர்கள் இவர்களைப் பார்க்க தாலூகா ஆபீசுக்குப் போக வேண்டியிருப்பதால் அதில் மிகவும் சிரமம் இருப்பதால் இந்தக் குறையைப் போக்க அரசாங்கம் 11-வது வரையில் இலவசமாகச் செய்துவிட்டால் நன்றாக இருக்கும். மதிப் பிற்குரிய எதிர்க்கட்சித் தலைவர் அவர்களும் இருக்கிறார்கள். நமது மாகாணத்தில் உயர்நிலைப்பள்ளிகள் வளர்ந்த அளவுக்கு கல்லூரி கள் பெருகவில்லை. சமீபத்தில் பத்திரிகைகளில் பார்த்தோம். கேரளாவில் 25 ஜூனியர் கல்லூரிகள் ஏற்படுத்தப்போவதாகவும் தனியாரானாலும் அரசாங்கமானாலும் அதை ஏற்றுக் கொள்ளலா மென்றும் அரசாங்கம் முடிவு எடுத்திருக்கிறது. நம் அரசாங்கமும் கல்வித் துறையில் உயர் நிலைப் பள்ளிகளின் மாணவர்கள் கல்லூரி களில் சேருவதற்கு படுகிற துன்பத்தை நோக்கவேண்டும். சேலம் மாவட்டம் எல்லாவகையிலும் பின்தங்கியதாக இருக்கிறது. மகாத்மா காந்திகூட அங்கு வந்தபோதுதான் முழங்கால் வரை துணி உடுத்தத் தொடங்கினார். மாகாணத்தில் எட்டு அல்லது ஏழில் ஒரு பங்கு கொண்ட ஒரு பெரிய ஜில்லா, 40 லட்சம் மக்களைக் கொண்டிருக்கிறது. தொழில் வளம் இல்லாத நிலையில் இருப்பதால் சமீப காலத்தில் அரசாங்கம் திட்டம் வகுக்கும்போது தொழில் துறையில் அப்பகுதி முன்னேற நல்ல வழிகளைத் தீர்மானிக்க வேண்டுமென்று தொழில் அமைச்சர் அவர்களை உங்கள் மூலம் வற்புறுத்திக் கேட்டுக்கொள்ள ஆசைப்படுகிறேன். அதே மாதிரி வட சேலத்தில் கல்லூரி என்ற வாசனையே இல்லை. தெற்கு சேலத் தில் இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் ஜூனியர் காலேஜ் ஏற்படுத்தி இருக்கிறோம். 40 லட்சம் மக்களைக்கொண்ட மாவட்டத்தில் நான்கு ஐந்து கல்லூரிகள் தேவைப்படும். அதைப்பற்றி அரசாங்கம் உடனடியாகக் கவனிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, சேலம் மாவட்டத்தைப் பொருத்தவரையில், தொழில் துறை இரும்புத் தொழிற்சாலை தொடங்குவதற்கு ஏற்பாடு செய்து நடவடிக்கை எடுத்திருக்கிறோம் என்று அரசாங்கம் சொல்லியிருக்கிறார்கள். அதற்காக சேலம் மக்கள் சார்பில் இந்த சபையின் மூலம் பாராட்டுதலையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறேன்.

22nd January 1964] [*திரு. ஏ. சாம்பசிவ ரெட்டியார்*]

குடியானவர்கள் சார்பில் சில சொல்லவேண்டியிருக்கிறது. நாம் விவசாயிகளுக்கு எவ்வளவோ செய்திருக்கிறோம். அவ்வளவு செய்திருந்தாலும் எங்கள் பக்கத்தில் இருந்த மதிப்பிற்குரிய அங்கத்தினர் கனம் கே. வி. ராமசாமி அவர்கள் நேற்று பேசிய பேச்சு கிராமிய பாஷையிலே இருந்தாலும் அது வெறுப்புணர்ச்சியிலோ அல்லது வேண்டாத எண்ணத்திலோ சொன்னதில்லை. வாழ்க்கையில் அவர்கள் அனுபவித்த தொல்லைகளைத்தான் சொன்னார்கள். உழவர்களுக்கு இருக்கிற துன்பம் அவ்வளவு கொடுமையாக இருக்கிறது. விதை கிடைப்பதிலும் உரம் கிடைப்பதிலும் கஷ்டம் அதிகமாக இருக்கிறது. எதிர்க் கட்சித் துணைத் தலைவர் பேசும்போது சொன்னார்கள். எவ்வளவோ வயல்கள் தண்ணீரில் மூழ்கிப்போய்விட்டன. சமீபத்தில் ஒரு நிலச் சுவான்தாரரைக் கண்டேன். 45 மூட்டை காணவேண்டிய இடத்தில் 20 மூட்டை விளைந்தது என்று சொன்னார்கள். இயற்கை மாற்றத்தால் சிறிது குறைந்தாலும் அரசாங்கம் கொள்முதல் காரணமாக தற்போது வியாபாரிகள் நெல்லை வாங்குவதில்லை. அவசரப்பட்டு நெல் விற்க வேண்டியவர்கள் குறைந்த விலைக்கு விற்கிறார்கள். கடந்த ஒரு வாரமாக நாம் எல்லோரும் பத்திரிகையில் பார்த்தோம். தஞ்சாவூரில் நெல் விலை சரிவு என்று போடுகிறார்கள். எவ்வளவோ கஷ்டப்பட்டுப் பாடுபடுகிறவர்களுக்கு நெல்விலை சரிவு என்றால் எப்படியிருக்கும்? உழவுத் தொழிலில் ஊக்கமே இருக்கமுடியாது. அரசாங்கம் எவ்வளவோ திட்டங்களுக்குச் செலவு செய்கிறார்கள். விவசாயக் கண்காட்சிக்கு ஐம்பது லட்சம் செலவு என்று வரவு செலவுத் திட்டத்தில் ஒதுக்கியிருக்கிறார்கள். இன்னும் ஐம்பது லட்சம் சேர்த்து ஒரு கூட்டாக மூட்டைக்கு பத்து, ஐந்து உழவர்களுக்கே கொடுத்துவிட்டால் வியாபாரிகளுக்கும் அதிகாரிகளுக்கும் தொல்லை இருக்காது. இடைவணிகர்களுக்கு இடமிருக்காது இதை அரசாங்கம் கவனிக்க வேண்டும். உழவனுக்குத் தன் தொழிலில் ஊக்கம் உண்டாக்க வேண்டும்.

விலைவாசி உயர்வைப் பற்றி எல்லோரும் பேசினார்கள். நானும் உணர்கிறேன். உற்பத்தி செய்கிறவர்களுக்கு கட்டுமா என்று பார்க்கவேண்டும். எஸ்.எஸ்.எல்.சி. படித்து விட்டு குமாஸ்தாவாக வந்து மாதம் 100 ரூபாய் பெறுகிறவர்கள் வாழுகின்ற வாழ்க்கை ஐந்து ஏக்கர் நிலமுள்ள ஒரு விவசாயி வாழமுடிகிறதா என்று கிராமத்திலிருந்து வந்த கனம் உறுப்பினர் சிந்தித்துப் பார்த்தால் அவர்களுக்குக் குறைந்த விலையில் கட்டுமா என்று தெரிந்து கொள்ள முடியும். நாம் எல்லோரும் சிந்திக்கவேண்டும் சோஷலிசம் பற்றி அடிக்கடி பத்திரிகையில் வருகிறது. எல்லோரும் விமர்சனம் கொடுக்கிறார்கள். எதிர்க் கட்சித் துணைத் தலைவர் அவர்கள்கூட எப்போது எழுந்துபோய்விட்டார்கள். அவர்கள் சொன்னார்கள். சோஷலிசம் புதிது அல்ல. அவர்கள் பாராயணம் செய்கிற வேதத்தில், ஆகமத்தில் இருப்பதைத்தான் சோஷலிசம் என்று சொல்கிறோம். ஒருவர் எல்லோருக்கும் எல்லோரும் ஒருவருக்கு. தனி மனிதன் பசியோடு பட்டினியோடு இருப்பதை சமுதாயம் 1-20 p.m.

[திரு. ஏ. சாம்பசிவ ரெட்டியார்] [22nd January 1964

பார்த்துக்கொண்டிருக்க முடியாது. சமுதாயத்தின் நன்மைகளை எல்லாம் தனி மனிதன் எடுத்துக் கொள்ளக்கூடாது. இதுதான் சோஷலிசம். அந்தச் சொல்லைக் கேட்ட அளவில் பயந்து ஏதேதோ பேசுகிறார்கள். இது வருந்தத்தக்க செய்தி. பொதுவாக தொழிலில் கல்வியில் வெற்றியடைந்திருந்தாலும் விவசாயத் துறையில் மிகவும் பின் தங்கியிருக்கிறோம். அதற்காகத்தான் விவசாயத்துக்கு ஏதாவது செய்ய தீவிர முடிவெடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். விவசாயத்தை வளர்ப்பதற்கு பஞ்சாயத்து யூனியன் ஏற்படுத்தியிருக்கிறோம். ஒரு கிராமத்திற்குச் சென்றிருந்தேன். அங்கு ஒரு வீட்டில் கிராம சேவக் என்று ஒரு போர்டு போட்டிருந்தது. பெயருக்கு கீழே ஆர்.டி.எல்.ஏ. டிபார்ட்மெண்ட் என்று எழுதியிருந்தது. நாம் இருப்பது கிராமத்திலா, பட்டணத்திலா என்ற சந்தேகம் வந்துவிட்டது எனக்கு. அந்த கிராம சேவக் தன்னை ஒரு ஐ.ஏ.எஸ். ஆபீசர் போல நினைத்துக்கொண்டு அப்படி எழுதி மாட்டியிருக்கிறார். அவரை கிராம சேவக்காக நியமித்து இருக்கிறோம். சமுதாய வளர்ச்சி என்பது வெறும் கட்டிடங்கள் மாத்திரம் அல்ல—மக்கள் மனப்பான்மையை மாற்ற அதற்காக பயிற்சி கொடுத்து சில ஊழியர்களை கிராமத்திற்கு அனுப்பினால் கிராம மக்களை மாற்றுவதற்கு பதிலாக மேலும் கீழ்த்தரமாக்குவது போல காரியங்களைச் செய்கிறார்கள். அதில் அரசாங்கம் கவனம் செலுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

சிவப்பு நாடா முறை என்பது ரொம்ப தொந்திரவு கொடுத்து வருகிறது. எங்கள் ஜில்லாவைப் பொருத்த வரை எந்தவிதமான தொழில் வாய்ப்பும் இல்லை. வெளியிலிருந்து ஆந்திரா, தஞ்சாவூர், தென்னாற்காடு போன்ற இடங்களிலிருந்து வாங்கி அரிசியாக அரைத்து கேரளாவுக்கு அனுப்பி தொழில் செய்துகொண்டிருக்கிறோம். மத்திய அரசாங்கம் போட்ட உத்திரவுப்படி எங்கள் தாலூகாவில் அரைவைத் தொழில் நடப்பது தடைப்பட்டிருக்கிறது. தனிப்பட்டவர்கள் சேலத்துக்கும் சென்னைக்கும் அடிக்கடி அனுப்பி ஏதோ தொழில் செய்யவேண்டுமென்ற ஆர்வம் காரணமாக விண்ணப்பித்தது 1958-லிருந்து இதுவரையிலும் முடிவு எடுக்கப்படாமல் பேப்பர்கள் தேங்கிக்கிடக்கின்றன. இதற்கெல்லாம் தீவிரமாக முடிவெடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். எங்கள் ஜில்லாவைப் பொருத்தவரை, அரிசி அரைவைத் தொழில் முக்கியமானதாக இருப்பதால், அதை ஊக்குவிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு வருகிற பட்ஜெட்டில் எங்கள் ஜில்லாவில் தொழில் வசதி பெறவும் கல்லூரிகள் அதிகம் ஏற்படவும் ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

MR. CHAIRMAN : The House will now adjourn and meet again at 10-30 a.m. tomorrow.

The House then adjourned.